## 52

# முத்துகிருஷ்ணன்

'என்ன! கிருஷ்ணா' என்று சொல்லிக்கொண்டே கனபாடிகள் வந்து உட்கார்ந்தார். கோவில் வாசலில். ராத்திரி எட்டரை மணிக்கு, சாப்பாட்டிற்கு மேல் அந்த ஊரில் எல்லோரும் கூடும் இடம், பொதுஸ்தலம், கோவில் வாசல்.

'அண்ணாவா – வாங்கோ' என்று சொல்லிவிட்டுக் கொஞ்சம் நகர்ந்து உட்கார்ந்தான் முத்துகிருஷ்ணன்–மரியாதைக்கு அடையாளமாக

'என்னடாது – ஏன் இப்படிப் பேசறே!' என்று கேட்டுக் கொண்டே உட்கார்ந்தார்.

'தொண்டை கட்டு, சளி, இருமல்...'

முத்துகிருஷ்ணனை உங்களுக்குத் தெரியாது; பத்து பேருக்குத் தெரிந்த மனிதனாக முத்துகிருஷ்ணன் ஆகிவிட வில்லை. பிரஸ்தாப சமயத்தில் அதற்குப் பிறகு நடந்த சம்பவத்தைக் கொண்டு ஊரில் ஒரு கலகலப்பு உண்டாகியது. பிறகு பொதுவாகவே பண விவகாரங்கள் அதாவது கொடுக்கல் வாங்கல் – இவைகளில் கொஞ்சம் ஜாக்கிரதை காட்ட வேண்டுமென்று அந்த ஊரில் ஒரு விழிப்பு மனப்பான்மை ஏற்படச் செய்ததின் பெருமை முத்துகிருஷ்ணனைச் சேரும்.

'இன்னும் யாரங்கே' என்று கேட்டார் கனபாடிகள் – கொஞ்ச நாளாய் அவருக்கு வெள்ளெழுத்து. சாயங்காலமாகிவிட்டால் பார்வை ரொம்ப மத்திமம்.

'எங்கே? ஒருவரையும் காணோமே' என்றான் முத்து.

'அட! இந்த வெள்ளெழுத்து வந்தப்புறம்... சரி, இந்தா, பத்து ரூபாய்தான் இருக்கு. மிச்சத்தை, இன்னும் ஒரு பத்துப் பதினைந்து நாளைக்குள்ளே–;

முத்து தயங்கினான். சுந்தர கனபாடிகள் 'உம்' யோசிக்காதே. இப்போ முடைக்கு இருக்கட்டும். என்னுடைய சக்தியையும் கொஞ்சம் அனுசரித்து, கொஞ்சம் பார்த்துக்கோ. சரி, போ இருட்டிலே எங்கே யாவது கீழே போட்டுடப் போறே. ஆத்திலே வச்சுட்டுவாயேன்...'

*பாரததேவி,* **22.10.1939**

தூரத்தில் வழக்கமாக வம்பளக்கும் கோஷ்டி வந்து கொண்டிருப் பதற்கு, அறிகுறியாக ஏக இரைச்சல், சிரிப்புச் சத்தம், ரகளை!

முத்து புறப்பட்டான். 'வீட்டுக்குப் போயிட்டு வா சுருக்க' என்றார் கனபாடிகள். 'உம்' என்ற ஒரு சத்தம் தான் கேட்டது.

வெகு நாழிகைக்குப் பிறகு முத்து வாசலுக்குச் சென்றபோது தூரத்தில் இரண்டு மூன்று பேர் சற்று உரத்த குரலில் பேசிக்கொண்டிருந்தார்கள். நடுவில் இன்னும் இரண்டொரு குரல்கள் கேட்டன. யுத்தத்தைப் பற்றிப் பேசிக்கொண்டிருப்பார்கள் என்று நினைத்தான் முத்து.

யுத்தம் ஆரம்பித்ததின் முதல் தற்காப்புச் சின்னங்களை சரிச்சான் விடுதி கிராமப் பஞ்சாயத்து விளக்குகள் மூலம் அந்த வட்டாரங்களுக்கு விளங்கிற்று. அதாவது ஊர் பூராவும் உள்ள மூன்று விளக்குகள் மேலும் தகரத் தொட்டிகளைப் போன்ற முக்காடுகள் கருப்புவர்ணம் மேல்புறம் பூசப்பட்டு கவிழ்ந்து கொண்டன.

யுத்தம் நின்ற பிறகு, அந்தத் தகர முக்காடுகளைத் தொட்டிகளாகச் செய்து விற்றுவிடலாம், அல்லது உள்ளூர் பள்ளிக்கூடத்திற்கு உபய மாகக் கொடுத்துவிடலாம் என்பது பஞ்சாயத்தார் முடிவு.

எனவே 'யாரங்கே' என்று கேட்டுக்கொண்டே கூட்டத்திலிருந்து திரும்பி சுந்தர கனபாடிகள் வந்தபோது, மங்கின விளக்கு வெளிச்சத்தில் நின்று கொண்டு முத்து. 'ஏன் மாமா! நான் தான் முத்து' என்றான்.

'ஊர் கிடக்கிற கெடையைப் பார்த்தியோ, இல்லியோ' என்றார் கனபாடிகள்.

'என்ன?'

'இந்தக் கிருஷ்ணன் பயல் – கோவில் வாசலிலே உட்கார்ந்திண்டி ருந்தான். அவனுக்கு இருபத்தைஞ்சு ரூபாய் நான் கடன் குடுக்கணும், பத்து ரூபாயைக் கொடுத்து இதை இப்போதைக்கு வச்சுக்கோ அடுத்த வாரம் மிச்சத்தைத் தரேன்று சொன்னேன்...'

'உம்–' முத்துவுக்கு தொண்டையில் அந்த சத்தம் அடைத்துக் கொண்டது. சிரமப்பட்டு வெளியில் அதைக் கொண்டு வந்தான்.

'கொண்டு போய் அதை வீட்டிலே வச்சுட்டு வந்து. திரும்பி வந்து பணம்னு கேக்கரானே–இந்த அநியாயம்... ஏண்டா முத்து!'

சுந்தர கனபாடிகள் மேற்கொண்டும் சொன்னார்–'அதைச் சொல்லப் போக. நான் குருட்டுப் பயல், யாரோ என்னை ஏமாதிப்புட்டான் என்றெல்லாம் சொல்ரான் திருட்டுப் பயல். இவன் நாசமாய்ப் போக, என்னை மோசம் செய்ய, 'தொண்டை கட்டி இருக்கிறது' என்று வேறே பொய் சொன்னான் – அப்போ!' என்றார்.

'என்னமோ போங்கோ!' என்று சொல்லிக்கொண்டே நகர்ந்தான் முத்து. இருட்டுப் பக்கமாக.

•